துரிதங்களுக்கேயிருப்பிடமாய்ச்சுகமீதகாமுதலுடைத்தாய்ப்
பரிபக்குவமற்றில்லாதபஞ்சவிடயங்கெடுதியதே
யரியபிரத்தியுபகாரமதற்குச்சமானமிலைமாதர்
பிரியமலதுபின்னைமற்றைப்பிரியம்பிரவஞ்சத்திலையே. (௰௫)

கண்ணிதமாங்காரியாகாரியத்தைத்தேரறிஞர்
கண்ணிதமுங்கங்கைக்கலைகுழிமயவனைக்
கண்ணிதம்பஞ்சேவித்தல்காரியமதன்றியின்ஞர்
கண்ணிதம்பஞ்சேவித்தக்காரியமென்றோதுவரே. (௰௬)

மண்டலத்திற்பொய்யாமில்வாழ்க்கையையோசித்திடுங்காற்
கண்டபிரமாணுபவக்காட்சியினையநுபவமாய்க்
கொண்டிருத்தலல்லதுபெண்குறியினிற்கைவைத்திருத்தல்
பண்டிதரிவ்வழியிலொன்றைப்பகுத்தறிந்துகொளனெறியே. (௰௭)

பங்கப்படுத்தும்பவக்கடல்விட்டேற்றுசத்த
சங்கைக்கரையினல்லாற்காமுகரைக்கேளியினற்
றங்கைப்படுத்துஞ்சமத்துடையமங்கையர்கள்
கொங்கைக்குவட்டிற்குடியிருக்கையன்றரோ. (௰௮)

வித்தாரமானவிருதாவழிப்பேச்சே
னித்தாரணியிலிரண்டுநுகர்ந்திடும்பொருள்கண்
முத்தாரக்குத்துமுலையாரைமேவுசிர
மத்தாற்பெறுமெவ்வனமும்வனமுந்தானே. (௰௯)

வட்டமுலைமாதரைப்போன்மனோகரமாம்பொருளிடையா
திட்டம்விசுவாசமுறவில்வாழ்க்கைக்கேதுமவர்
கட்டாட்டங்களுக்கெல்லாங்காரணமுமவர்தனை
யட்டதிக்கெங்கணும்வெளியாயறியாதபேரிலையே. (௨௰)

சம்போகவருணனைமுற்றிற்று.

---

## காமினிகர்கணம்.

சுத்தவாபாசமாந்தோற்றுத்தியாம்பெண்ணையானை
மத்தகக்கொங்கைசிலைமைக்கண்விற்புருவமென்னப்
பித்தர்பேசப்புகழ்ந்துபேசிப்பிரியமோடணைந்துமேவும்
வித்துவான்கண்மாமோகவிகாரமாச்சரியந்தானே. (௧)

எண்ணிடிவ்வெந்தாபமெதிர்நோக்கிற்கண்மயக்கம்
வண்ணமுலைதீண்டின்மதிமயக்கமுண்டாக்கும்
பெண்ணணைக்களுரைப்பிரியைப்பிரியையெனக்
கண்ணிலாமாந்தர்களிந்துரைத்தல்பொருந்தாதே. (௨)

எந்நேரம்பெண்கள்கண்ணுக்கெதிராலேகாண்பாரே
வந்நேரவரைபுருடர்க்கதிபிரியந்தருமமுதா
மெந்நேரமவர்கள்கண்ணுக்கெதிராலேகாண்கிலேயோ
வந்நேரம்ப்ராணசங்கடஞ்செய்விடமாகிடுமே. (ரு)

தன்னேரில்லாதசருவாங்கபூடணியா
மின்னேயமுதம்விடமுமொருவடிவா
முன்னேயமாகின்முயங்கமுதவல்லியன்றேற்
பின்னேவிடமாய்ப்பெருந்துயரைச்செய்திடுமே. (சு)

சந்தேகஞ்சாகசந்தோடம்மவநம்பிக்கைக்காதாரமாகி
யந்தரவிக்கினநரகத்துவாரம்வஞ்சப்பேழைவிடவமுதமாகிச்
சொந்தநண்பன்றன்கழுத்திலிடுநாணுக்கெதிரிடுநாண்சுருக்குமாகிப்
பந்தனமாகியஸ்திரியெந்திரத்தையிந்தவிதமெவனோபடைக்கின்றானே. (எ)

சந்திரன்போன்முகங்காவிதனைப்போற்கண்ணென்பதும்பொய்தங்கமேனி
யிந்தவுடலென்பதும்பொய்கவியால்வர்ணித்துவஞ்சித்திடும்விவேக
ருந்தசைமாமிசந்தோலென்பூத்தைமலமூத்திரநீரொழுகக்கண்டு
மந்தபுத்தியாற்பேதைமடவாரைப்புகழ்ந்துசித்தமயங்குவாரே. (அ)

கூடப்பிறந்ததிராகம்பதுமினிக்குப்பிறகே
கூடத்தொடர்ந்தலையும்வீணில்வண்டின்குழாமதுபோற்
கூடப்பிறந்ததுலீலாவதிகட்குக்கோலமவர்
கூடத்தொடர்ந்தலைவார்வீணிலேமயல்கொண்டவரே. (எ)

சந்திரகாந்தியைவென்றதாமுதத்தால்விளங்குஞ்
சுந்தரமான்விழிச்செந்துவர்வாய்ச்சிகன்சோதிமுக
முந்தவிளநறுந்தேமாங்கனியின்முதிர்கனியா
யந்தம்புருடர்க்குத்தீராதகஷ்டமுண்டாக்கிடுமே. (அ)

தண்கமலமுகங்கூந்தற்பாசிமீன்விழிகள்குயஞ்சக்ரவாகம்
வெண்மணற்குன்றிருசகனமடிப்பலைநீர்ச்சுழிகொப்பூழ்மேலேயோங்கும்
பெண்களெனுங்கான்யாற்றுப்பிரவாகந்தனையகலும்பிரிவேனகா
மண்ணுலகிற்சமுசாரக்கடன்மூழ்கப்பிரியமற்றவர்க்குத்தானே. (கூ)

ஒருவனுடனேவாய்பேசுமொருவன்முகத்தைக்கண்பார்க்கு
மொருவன்பிறகேமனந்தொட்ருமுண்மையுடையசமத்திகள்யாம்
பிரியம்பிரியமும்மையெனப்போபோகச்சொல்வரவர்
பிரியம்பிரியாதிவர்களிலியார்பேரிலுளவோதெரியாதே. (ய)

பார்வைவிடம்விலாசமுடைப்படப்பொறிகள்பொருந்தியமற்
றோர்விடமாமிவ்விடத்துக்கொதுங்கவராவிடந்தீண்டிற்
றீர்விடமுண்டாமணிமந்த்ராதியினுற்பெண்ணெனுமிப்
பேர்விடமந்திரத்தாலும்பிறவாலுந்தீராதே. (யக)

செனிப்பெறும்வாரியிற்பெண்ணெனுந்தூண்டிலைச்சேர்த்தெறிந்து
கனித்தவர்வாயிதழாகியமாமிசகண்டந்தின்று
மனித்தரெனுங்கெண்டைமீன்களைக்காமவலையன்பற்றி
பினித்திடுமோகக்கனன்மூட்டியேசமைத்திட்டுண்பனே. (௧௨)

மனமாந்தனிவழிச்செல்பவனேதனமால்வரையாற்
றினமாருஞ்சோரத்தனடயாகுமவ்வஞ்சியர்புரமாம்
புனமூடுபோகிலேபோனாலவிடத்தெப்போதும்பல்விக்
கினமேசெய்மன்மதனுஞ்சோரனக்கிருக்கின்றனனே. (௧௩)

பெருகமுதக்கொடியாவர்பிரியமுண்டேல்விடக்கொடியாம்பிரியமின்றேன்
மருவியவல்விடந்திண்டின்மாற்றுதற்குப்பலவிதமாமார்க்கமுண்டு
கருமையும்வக்கிரமுமுடைக்காரிகையார்பார்வைபட்டாற்காதன்மீறும்
புருடருக்குமருந்துமந்திரிகளுந்தேடிற்கிடையாபுவியிற்றானே. (௧௪)

நடனக்கானர்த்தனமர்த்தனுதியமுதாரசங்கத்த
மடவாரிடத்திலுண்டென்றவஞ்சித்திரசத்துருவாக
வட்டாவெருகோரியக்கெடுநியாகும்படிக்குவிடமனைய
விடயமனைத்துமெனைமயக்கிவீணேமோசஞ்செய்தனவே. (௧௫)

முன்னைமணிமர்த்ராவுடதத்தாலும்விர்த்திசெய்யமுடியாமற்றை
யென்னவிதமாயனந்தஞ்சாந்திசெய்தபோதினும்போக்கெய்தாமோக
சன்னதத்தாலக்கமதில்விகாரமுண்டுபண்ணுவித்துத்தரியாவண்ண
மன்மதனும்பாசமெனைச்சக்கரம்போற்கண்சுழலமயக்குந்தானே. (௧௬)

அந்தகன்விருத்தன்மூடனழிகுலன்குட்டரோகி
தந்திடுமொருகாசுக்காய்த்தனம்பிறகொடுத்துப்போதப்
பைந்தருமேலேருழ்கற்பகமதிக்கொடியுங்கொய்யு
நிந்தைசேர்பொருட்பெண்டிர்மேனியினைவிலையெவன்வைப்பானே. (௧௭)

ஆசைகூழாகாஞ்சமித்தால்வனர்
வேசையாம்விரகாக்கினிமேன்மதன்
பூசைசெய்பவர்பொற்றனமெவ்வன
மோசையாவளித்தோமஞ்செய்வார்களே. (௧௮)

சாரர்படர்கடர்கீழ்சாதியினர்தூதரோடு
சோரர்பிறர்கூடியுண்ணுந்துச்சவெச்சிலோடான
வாரார்குவிமுலையார்வாயதரபானமதை
யோராமற்சேர்ந்துபுருடோத்தமர்களுண்ணாரே. (௧௯)

வாக்கினிலேசெந்தேனுமடவியர்தம்மிருதயத்திற்
றீக்கடுவுமெப்போதுஞ்சேர்ந்திருத்தலாலவரோ
டாக்குமிதழ்ச்செந்தேனையருந்திமனமகிழ்ந்துபின்னே
தூக்கியேமார்பினின்மர்த்தனஞ்செய்வாராடவரே. (௨௰).

காமினிகர்கணா முற்றிற்று.

## சுவிரத்ததுர்விரத்தபத்ததி.

கருக்குந்திருக்குங்கொடியிடையிற்கவினார்மடிப்புமெவ்வளத்தின்
செருக்குமருட்கொள்வரவிபர்கள்சித்தமுருக்கும்படிநெருக்கும்
பெருக்குந்தனமுமுடைமடவார்பேரில்விகாரமன்னியிலே
யிருக்கும்புருடனெவனவனேயெவர்க்கும்புருடோத்தமனாமே. (௧)

மந்தமாந்திருட்டியினான்மருட்டுருட்டுசிமிட்டுவிடு
பந்தமாமஞ்ஞானம்பாழானதெவ்வனமும்
விந்தையாயொழிந்துமனோவிர்த்தியுங்காடுறைந்தினி
யிந்தவுலகந்திரணமெனநினைப்போமேந்திழையே. (௨)

என்னுடையமோகவிகாரங்களெல்லாமொழிந்ததுபின்னிதயம்வாட்டு
மன்மதனும்வேடன்விடுமக்கினிபாணங்குளிர்ந்துமனரோச்சு
மின்னிடையேயின்னமுமென்மேற்கருங்கணீலமலர்விரும்பிச்சாத்துந்
தன்னுடையதன்மைவிடாளென்னுயிரைவிழுங்கவந்ததலைவிதானே. (௩)

பூங்கணையைப்போடாதேபோடாசும்மாமதனா
மாங்குயில்காளேனீங்கள்வாய்சடைக்கக்கத்துகிறீர்
வீங்குமுலைமாதேயுன்வீண்பார்வைபோதுமுள்ளம்
பாங்குடனேயெம்மான்பதமலரேவேண்டிடுமே. (௪)

கவனமிகுமநுராகிகட்குவிரகத்தினிலு
மவரிலொருவர்க்கொருவரனுபவச்சேர்க்கைகள்விளங்கு
மெவர்மனமொன்றாகவில்லையோவவர்க்குச்சேர்க்கையிலுந்
தவனமிகும்விரகமதைத்தானேயுண்டாக்கிடுமே. (௫)

மாவடுவைவகிர்ந்தன்னவரிவிழியாடன்மனையிற்
சிவனுடனிருந்தாலுஞ்சிவனில்லாதிருந்தாலு
மாவறருங்கார்காலத்தடுக்குமொருவழிப்போக்கன்
போவதினியொழிவனெனப்போகானவ்விடத்தினுக்கே. (௬)

கனங்குழலார்தருஞ்சுகமோர்காலமுஞ்சாசுவதமல்லக்கவிகாவன்னோர்
தனங்கணிதம்பங்கணரகெய்தாமற்றடைசெயுமாதன்னுந்தன்னு
மனங்களிகூர்ந்திடக்கருணைமயித்திரியைச்சேரறிவாமயிலன்னாளைத்
தினந்தினமும்பிரியாமலுடன்கலந்துசகவாசஞ்செய்குவீரே. (௭)

யோகமார்க்கத்திலாசையுவசிலியாருடையவுள்ளத்
தேகமாய்விளங்குமன்னோர்க்கிலங்கிழைமடவார்தங்கள்

பாகனமொழியுங்கூடிப்பருகிதழ்ச்சாறுஞ்செந்தேனுந்
தாகமோடணைத்துக்கட்டித்தழுவிச்சேர்தலும்வேண்டாவே. (௮)

மன்மதனெனுமஞ்ஞானவல்லிருடன்றுலெல்லா
மன்னமென்னடையாராய்ப்பார்த்தறிவிப்போதறிவாமையா
லென்றுடைப்பார்வையானதெவ்வுலகத்தியாவுந்
தன்றுனேபிரமமாகச்சர்ந்தம்பார்க்குந்தானே. (௯)

மின்னேர்நுண்ணிடையார்வெவ்விடமார்சஞ்சலப்பார்வை
யெந்நேரவரைபார்வைக்கெதிர்ப்படாதிருந்திடுமோ
வந்நேரவரையிலும்புண்ணியவான்கட்கசைவிலாத்
தன்னேரில்லாதபகுத்தறிவொளிமேற்றயங்கிடுமே. (௰)

எல்லாநூலுங்கற்றவர்மானினியார்சேர்க்கைகெட்டதெனச்
சொல்வார்சமத்தாபடிக்கடிவாய்ச்சொல்லாற்பின்னைப்பயனென்னே
வல்லார்முலையார்மணிக்காஞ்சிவடமார்பருத்தசகனமதிற்
செல்லாதவாசையைநிவிர்த்திசெய்யுஞ்சமர்த்தனெவன்றுனே. (௰௧)

இந்திரலோகந்தவசுக்கேற்றபலந்தந்தருள்வ
தந்தவுலகத்தமரம்பையரேசொந்தமின்னுர்
வந்தெதிரிடுங்குடிலவாதிபாவஞ்சர்களே
நிந்தைசெய்வார்மாதர்களைநிந்தைசெய்யார்மற்றவரே. (௰௨)

துங்கமதயானைமண்டைதனைபடுத்துஞ்சேவகருஞ்
சிங்கமேற்பாய்ந்துகொல்லுந்தீரர்களுமெங்குமுண்டு
அங்கசவேள்கெருவமதையடக்கவல்லாரெங்குமில்லை
யெங்குமில்லையென்றசவையெங்குநீசாட்டுவையே. (௰௩)

காதளவோடிப்புருவவில்லினின்றங்கடைபிறழுங்கடைக்கணேவான்
மாதரெறிவரைமனதையிருபிளவாக்கிலையோவம்மட்டுநல்ல
நீதமுடனிந்திரியநிக்கிரகஞ்செலொழுக்கநெடுநாளான்ம
போதமிகுசாந்தமுதலெக்குணமுமாடவர்க்குப்பொருந்துந்தானே. (௰௪)

பேராசைப்பற்றடைப்பெண்டிர்செயுஞ்செயலை
நேராய்த்திருப்பவனின்முடியைத்தேடியபோற்
பாராதியைம்பூதம்பல்லுருவாய்ச்சிட்டிசெய்வோ
னோராய்ந்துபார்க்கிலவனுறுமாகாதே. (௰௫)

அன்னநடையின்னார்மேலாசைகொண்டவாடவருக்
கென்னவிவேகுணமெல்லாமிருந்தாலு
மன்மதவிடாச்சிவிசர்வாக்கமெங்குமேலெழுந்த
தன்றுமட்டுநிற்குமல்லாற்சொன்னவைமேனில்லாவே. (௰௬)

வஞ்சியர்விற்புருவமேமபுரவாசற்கதவுகளின்
குஞ்சிகைபோல்விளங்குவதாற்குடும்பசாகரத்துழல்வோன்
விஞ்சுசாத்திரசிவிவேகமறிந்தோனெனினுந்
தஞ்சமெனநற்கதிகள்சார்ந்திடுதலருமையே. (௯எ)

கான்முடமொருகண்வாலிலாதினைத்தங்கமெலாம்புழுநெளிவிரணத்
தூன்வழிந்தொழுகமுகப்பணியாகவொழித்துணவெடுத்துடைசோற்றுப்
பானையோடலையவோடுசாய்காமப்பசிக்கெதிர்கண்டபெண்ணாயைத்
தானையோவேனாபின்றொடர்ந்தோடத்தக்கதாய்க்காமன்வாட்டுவனே. ()

சகந்தனைச்செயிக்குஞ்சத்தியைச்சித்தசற்குதவிடுஞ்சமத்திகளைப்
புகழ்ந்துகொண்டாடாதகந்தையோடிகழ்ந்தபுருடபாமதர்மிகள்சிலபேர்
திகம்பரர்பிரமசாரிகாபாலிதெண்டிகளாய்த்திரிவார்கள்
சுகந்தருபோகங்கிடைக்குமோகிடையாசுகமதனாணைமீறினர்க்கே. (௯க)

சருகுஞ்சலங்காற்றுணும்பராசரர்கோசிகர்முதன்மாதவர்பெண்ணாசைக்
குருகுசித்தமுடையவராய்த்திரிவாரேலருசியொடுமுருக்கிவார்க்குங்
கிருதகுளபாயசபோசனப்பிரியர்க்கிந்திய நிக்கிரகஞ்செய்ய
வருமாவப்படிவருமேல்விந்தமலைமேன்மிதந்துவருமென்பாரே.

## சுவிரத்ததுர்விரத்தபத்ததிமுற்றிற்று.



### ருதுவருணனை.

## வசந்தருதுவாகிய விளவேனிற்காலம்.



மந்தமாருதஞ்சுகந்தமருவமாங்குயில்கூவப்
பைந்தருக்கடளிரினப்பனித்துளிபோன்மடவியர்தஞ்
சந்திரமாமுகம்வெயர்வைதரவருமிவ்வசந்தருது
வெந்தவஸ்துகளுக்குத்தானெய்துவியாகுமுதயமே. (௧)

கொத்தவிழ்சந்தனச்சாரற்குளிர்வாடைகுயிலோசை
மெத்தெனவேவசந்தருதுவினில்விரகிகளைவருத்த
வெத்தனஞ்செய்தனவுலகிலியாவருக்குமிடருமக்காற்
புத்தமுதந்திவிடமாய்ப்போய்விடுதலியற்கையே. (௨)

அரும்பலர்கொடிப்பூம்புதைகளுங்கிலிகிஞ்சித்ததாமணிபிறையாருங்
கருங்குயிற்றொனியுங்கவிசுமர்பிரசங்கமுநிலாவாடையும்வாசம்
பொருந்துபூந்தடமும்புட்பமாலிகையும்புண்ணியசாலிகட்கவர்செய்
பெருந்தவப்பயனால்வசந்தகாலத்திற்பெரியதோர்சுகம்பெறச்செயுமே. (௩)

---

குஞ்சிகை—தாழ்க்கோல்.

கிலிகிஞ்சிதம்-சிங்காரரசத்துக்கிருப்பிடம்.

விரகமடவார்விரகவெந்தழற்காகுதியாமா
மாமலர்க்கொத்திலேசேக்கைமதித்தனமாங்குயில்களங்கண்
சுரதசிரமந்தணிக்கச்சூழ்ந்திடும்பாதிரிமணத்தைப்
பரவுமலயாநிலமேற்பரப்பிவருமெங்கணுமே. (௪)

புதுநிலாநிழற்றனக்கண்பூந்தேர்போலசைந்துவரு
மதுமலர்ச்சந்தனச்சோலைமணங்கமழுமிளந்தென்ற
லெதுவரையுங்குளிர்வீசாதிருக்குமோவதுவரையுஞ்
சதுருடைமங்கையர்க்குமனஸ்தாபமுண்டப்புறமில்லையே. (௫)

நிச்சேமாம்பூக்கொத்துகளிற்செந்தேனுடனேசெறிவாச
மோந்துவரிவண்டுகண்மயலின்மூழ்கும்வசந்தகாலமதிற்
சாந்தமுலையார்தமைக்காணிற்சகத்தில்விடயசுகம்பொருந்து
மாந்தர்தமக்குளியாருடையமனந்தானவர்பாற்செல்லாதே. (௬)

## கிரீஷ்மருதுவாகிய முதுவேனிற்காலம்.

சந்தனக்குளம்பால்விளங்குகாமிகண்மந்தாநிலநிலாமணிமேடை
கொந்தலர்வாசமல்லிகைப்புட்பக்குலவியவெந்திரகோக
மிந்தவிந்திரவைபவத்துடனுலகத்தெவருநல்லின்பமெய்திடவே
வந்திடுகிரீஷ்மருதுவின்மன்மதனைமதத்தொடுவளர்ந்திடச்செய்யுமே. (௭)

வத்திரக்கனபசந்தனம்புட்பம்வளர்நிலாவுபரிகைதூளி
மெத்தைமேல்விசிறிவெறிமதுவுண்ணன்மிகுந்ததாமரைமலர்வாவி
முத்தணிமுலையார்முதலியபோகமுதிர்ந்திடுகோடைகாலத்தி
லுத்தமபுருடர்க்கல்லதுபின்னையொருவர்க்குங்கிட்டிடாதவையே. (௮)

தண்ணிலாமலர்மாலைசந்தனங்கேளிக்கிசைந்த
வண்ணமணிமேடைபெண்கள்வதனமுதிர்வேனிலிலே
யெண்ணமுறுங்காமிகளுக்கெப்போதும்விகாரமுண்டு
பண்ணுமிட்காயிட்கதைச்சொற்பனத்துமுண்டுபண்ணுவே. (௯)

## வருடருதுவாகியகார்காலம்.

போரவைசவெளிகாட்டப்பெருத்தபயோதரம்விளங்கத்
தாராரும்புதியதாஞ்சாதிமலர்மணம்பொருந்தக்
கார்காலமாகியபெண்காசினியிற்களிப்புடனெல்
லோர்களுக்குஞ்சந்தோடமுண்டுபண்ணுவித்திடுமே. (௰)

மேகவான்கான்முளைவிளங்குகன்னிலங்
தோகையார்வனம்பலசகந்தவாடைக
ளேகமாய்க்கூடியேயெவர்க்குங்கார்தனிற்
போகமார்தருசுகம்பொருந்தச்செய்யுமே. (௰௧)

கருமுகில்சோபையைக்காட்டக்கார்ப்பருவந்தளிர்காட்டப்
பருபதமேற்சிறைவிரித்துப்பசுந்தோகைநடங்காட்ட
வுருவிலிமோகாவேசமுடையோரெவ்விடத்தினிற்றுஞ்
மருவியதம்பார்வையினைமலர்ந்தருளச்செய்வாரே. (௰௨)

மின்னற்கொடியின்பிரகாசம்விரிந்ததாழைமடல்வாசம்
வன்னப்புயலின்பெருமுழக்கமயிலின்றொனிகளிவைமுதன்மேற்
சொன்னமனோரம்மியம்பொருந்தும்சுதினமதுமன்மதபீடை
தன்னையடைந்துபிரிவடைந்தோர்தமக்கெவ்வாறுகழிந்திடுமே. (௰௩)

கன்னங்கரியவிருள்சார்ந்தொனிவிடாமாரி
சொன்னக்கொடிபோலச்சோதியெங்கும்வீசுமின்ன
லன்னியர்தஞ்சேர்க்கையவாவித்தனிவழிச்செல்
பொன்னனையார்க்கின்பதுன்பம்போம்வழியிற்றந்திடுமே. (௰௪)

இரவுபகலடைமழையாலெழுநிலைமாடத்திருப்பாச்சிடைவிடாத
விரகசன்னதத்தாலிங்கனங்கிடைத்ததைசந்தகுளிர்வீசுங்காற்றாற்
சுரதசிரமந்தணிந்ததாதலினாற்றாத்தினமுஞ்சுதினமாச்சு
தாவசலல்குலினல்லார்கலவியினைவிரும்பியவாடவர்க்குத்தானே. (௰௫)

## சரருதுவாகியகுளிர்காலம்.

அத்தராத்திரிமட்டுடன்கலந்துவகையாயனுபவித்திடுசிரம
மத்தியபானமதமடியுடன்சேர்மடவியர்தளர்நடையினராய்
மெத்தைமேலிருந்துமதியொளிவிரிந்தவெள்ளரிப்பழமெனத்தெளிநீர்
கைத்தலத்தேந்தப்புண்ணியவான்கள்களிப்புடனருந்திடுவாரே. (௰௬)

## ஏமந்தருதுவாகியமுன்பனிக்காலம்,

புத்தமுதனையவறுசுவையுடன்சேர்போசனமருந்திமேற்சிவந்த
வத்திராதிகண்மேலலங்கரித்தைந்துவாசமார்பாகிலைச்சுருள்கன்
னத்தினிலொதுக்கிக்குவிமுலையணங்கனாருடன்குளிர்பனிக்காலத்
துத்தமரூர்ந்தமேடைமேற்கூடியுவகையங்கடலுண்மூழ்குவரே. (௰௭)

குங்குமமந்தாரமலர்க்கொம்பரிடைப்படர்ந்தமௌவற்கொடிகண்மீது
தங்குசிறைவண்டசைக்குஞ்சதாகதிசேர்பனிக்காலந்தன்னிற்சேரு
மங்கையராடவர்பிரிவாற்றாமையிலுண்டாங்காமவருத்தத்தாலே
கங்குலானதுவிடியாதெமலோகம்போற்போகக்கழிப்பர்தாமே. (௰௮)

## சசருதுவாகியபின்பனிக்காலம்.

ஒருகனத்தோடிருகனத்தைமுத்திமுகத்தினிலேநெட்டுயிர்ப்புவீங்க
விருதனத்தைவலிதினிற்றெருட்டேதிதுகாண்பெரியவம்பதெனப்பிற்றட்டிற்
சொருகியமுன்றானைதலைப்பிடித்திழுத்துமிகச்சருவிச்சோரமாத
ருகினில்வந்தனுதினமுமருவியகாமுகரெனக்காற்றடிக்குந்தானே. (௰௯

முன்னதராமுதம்பருகிமுகத்தினிலடச்சித்காரமுழங்கச்செய்து
வன்னமுலைக்கலையிழுத்துமலர்த்தவிழ்த்தளைமறைத்துமணமேலெய்தப்
பின்னலணிசுறந்தெரியற்பின்னலவிழ்த்துடற்புளகம்பெரிதுண்டாக
வன்னியமாதரைச்சேருமாசைகாயகரெனக்காற்றடிக்குந்தானே. (௨௯)

ருதுவருணனைமுற்றிற்று.

சிங்காரசதகமுற்றிற்று.

---

# வைராக்கியசதகம்

## திருஷ்ணாதூடணம்.

மங்களாக்கத்துமுனைத்திறும்விளங்கிமதனனும்விட்டிலைத்தித்து
வெங்குறுங்கரையற்றிலங்கிமாமோகவிருளினைப்போக்கிவேணியினிற்
திங்களங்கண்ணியிலச்சிமெய்ஞ்ஞானதீபமாயோகர்தம்மிதயத்
தங்கியசச்சிதானந்தபிரமசன்னிதிதன்னையுண்ணினைவாம். (௧)

செல்லாததேசமெங்குஞ்சென்றேனற்பரைச்சேவைசெய்தேன்மான
மில்லாதிற்றொருமிடும்பிச்சையைப்புறம்பார்த்துக்காகமெனத்தின்றேனி
நல்லான்மற்றொருபலனுமெனநிச்சாயத்தினைத்தாலடையேனின்னம்
பொல்லாவிருணாசைகேயேன்றிருத்தியடையாமற்போகின்றாயே. (௨)

தரைமுழுதார்தனைப்புதையலுண்டெனமண்கல்லியதிற்சங்கைதீர்த்துந்
திரைகடற்றாண்டியுமலையிற்றாதுகளூதியும்ராசசேவைசெய்து
மறைபிரவிற்சுடுகிலச்சென்றனேகமந்திரங்கள்செபித்தலைந்துமிந்நாள்
வரையொருசோடுங்காணேன்வாஞ்சையேயின்னமுமெமமகிழ்த்திடாயே. (௩)

துட்டருரைக்கின்றகொடுஞ்சொல்லையுங்கேட்டுச்சகித்தே
றுட்டினமுங்கண்ணீருமுள்ளடக்கியேசிரித்தேன்
கெட்டமதியோரையும்போய்க்கேழ்ப்பணிந்தேனின்னமுமுன்
னிட்டமொழியாயாசையேயெனைக்கூத்தாட்டுதியே. (௪)

தாமரையிலைத்தண்ணீரெனப்பிராணன்சஞ்சலரூபமாமதற்காய்த்
தீமதியொடுசெய்யாதவைசெய்துந்தினஞ்செல்வச்செருக்குடையலோபப்
பாமரர்சபைபுக்கொப்பிலாச்சகலபண்டிதரியாமெனப்புகழ்ந்த
காமதிபாவம்விளைத்தனமதனுமற்றொருபலனுமங்கிலையே. (௫)

அவமானம்பொறுமையன்றிப்பொறுத்தோமில்லத்தனுபோகமகிழ்ச்சியன்றி
யனுபோகித்தோஞ், சிவதியானங்களன்றித்தியானஞ்செய்தோஞ்சீதோட்டி
ணஞ்சகித்தோர்தவத்தாலன்றி, தவனமெலாம்பொருண்மேல்வைத்தற
வோர்செய்யுங்கன்மமெனையவையெல்லாஞ்செய்தோஞ்செய்தர், தவமதனு
லடைபலத்தைமட்டுஞ்சற்றேனுமியாங்களின்னமடைந்திலோமே. (௬)

---

திருஷ்ணாதூடணம்-ஆசையைத்தூடணித்தல்.

மோகவலையிடைப்படுத்தமொய்குழலார்முதலியவெண்
போகமனுபவிக்கவிலைப்போகவிலைமுக்காலந்
தாகமுறுதவசால்வெந்தாபமனு[illegible]யாதெ
யேகவிலைநம்[illegible]தெய்வவிதங்களானது[illegible]. (எ)

காசையேவிரும்பிமற்றைக்காமுகரைவிரும்பு[illegible]
வேசையுறவெனயாக்கை[illegible]டமிலங்குநல்ல
தேசைவிளக்கிடுமுகமேற்றிரைசிரமேல்வெண்ணரையாச்
சாசைமட்டுமெவ்வுணைத்தோட்டிவிலாதிருந்ததுவே. (அ)

தேகமூப்பாச்சுரித்தாஞ்சிநேகம்போச்சூன்றதடிசிநேகமாச்சு
மோகவிச்சைபோகவிச்சைதொலைந்தாச்சுகொண்டாட்டம்முழுதும்போச்சு
மேகபடலம்மெனக்கண்டமோரோகத்தான்மறைந்துவிட்டதின்ன
மேகபிராணன்போமென்றேக்குறுமென்னேழைமைதானென்னேயென்னே

விருத்தியாம்விதர்க்கபுள்ளொடுதிரமென்னும்வான்றருவினைச்சாய்க்குந்
திருட்டணையலைகண்மோகமாஞ்சுழிகடுங்குறுமனோதசலங்கள்
வருத்திடுமிராகவிடங்கர்சூழ்கிடக்குமருவியதாசையதென்னும்
பெருத்தகான்யாற்றைத்தாண்டியோகிடோம்பேரின்பக்கடலின்மூழ்குவரே.

திருஷ்ணாதூடண முற்றிற்று.

## விடயபரித்தியாகவிளம்பனம்.

கண்ணியவெம்பவந்தாலாஞ்சற்கிரியைசுகமெனவேநண்ணமாட்டோம்
பண்ணியபுண்ணியபலன்சம்பத்துடனேபயத்தையுண்டுபண்ணும்பூர்வ
புண்ணியத்தாற்பொருந்தியசந்தனமுதலாம்பலபோகம்புவிமேற்போகிக்
கெண்ணியக்காற்றிங்கினையேயெய்துவித்தற்கபிவிருத்தியெய்துந்தானே. (க)

பன்னாளிருந்தும்விடயசுகம்பயனற்றொழியுமொழிவதிலும்
பின்னுசத்தைக்கொடுத்திடுமப்பேர்ப்பட்டதனைவிடயசுகி
தன்னாலொழியான்மற்றதனைத்தானேதெரிந்தங்கொழிப்பானே
லெந்நாட்களிலுமழியாப்பேரின்பசுகத்தையடைவானே. (உ)

தனமுதலானவைபோகந்தனக்கிடமாயிருப்பதெனா
மனவினிற்கண்கடதையுஞானிகள்பொய்யெனத்திண்டார்
கனவினுமுக்காலத்துங்காணுதுகற்பிதமாய்
மனதினிற்றோன்றிடுதலையரமறந்திருக்கமாட்டோமே. (ங)

கச்சிதானந்தந்தனையுணர்பெரியோர்தங்களானந்தக்கண்ணீரை
நச்சியேயறவைக்கூட்டங்களைவர்தகடுத்தொடையேலிருந்தருந்துங்

---

விதர்க்கம்—விடயவிச்சை.

விடயபரித்தியாகவிளம்பனம்-விடயபோகநீக்குதலைக்கூறல்.

கச்சணிமுலையாருடன்மணிமேடைசமலவாவிகள்வனங்களிலே
யிச்சையோடநுபவிப்பவர்க்காயுளேபயனின்றியேகெடுமே. (ச).

உண்பதோர்தட்டையதுமுருசியில்லாவூர்ப்பிச்சை
கண்படைமண்டலமேடுகந்தையரைவந்திரமே
எண்புதிலையற்றவுடலுமிவ்வாறிருந்தாலும்
பண்பிலாவிடயவிச்சைப்பற்றெமக்குந்காவே. (ரு).

மாமிசபிண்டமார்தனஞ்செம்பொன்மணிக்குடமலசலத்தான
மாமிருசகனமியானைமத்தகக்கோழைக்கிருப்பிடமதாம்வதனம்
பூமியிலுதயமாமதியெனவேபூவையரவயவாதிகளைத்
தாமிகக்கவிஞர்வாக்குச்சாதுரியத்தாற்பலவாறுகூறுவரே. (சா).

சிவனோசாமிகட்குமாத்தனுரிசன்மன்மதனைத்திக்கண்ணாற்சுட்
டவனேகாமிகட்குளதிதிரன்மற்றொருவரையுநாங்காணோம்
புவனமெலாஞ்சுடுஞ்சாமவிடாக்கினிமுன்சிறுபூளைபோல்வான்மற்றை
யெவன்மடவாருடன்கூடல்பிரிதல்சமாசமாகவிருப்பான்றனே. (எ).

அக்கினிச்சுவாலையதில்விட்டில்வீழுமறிவிலாமீன்களுண்பொருட்டாற்
சிக்கிடுந்தூண்டிறனிலவைதெரிந்துந்தெரிகிலர்போலவேநாங்க
டுக்கமாதிகளுக்கேதுவாம்பெண்கள்சுகத்தினிச்சைவிடமாட்டோ
மிக்குவலயத்தைக்கெடுக்குமாமோகமெப்படிப்பட்டதோர்ந்திலமே. (அ).

தாகமுடையோன்குளிர்ந்தசலமருந்தும்பசியுடையோன்
பாகமுடனன்னமுண்பான்பற்றுடையோன்மடவாரை
யேகசயனத்தணைவானிப்படிரோகந்தீர்ந்து
போகவிடற்கேதுவினைப்போகமெனல்பொருந்தாதே. (கூ)

துலங்குமாடம்பெண்டிர்பிள்ளைதொலையாநிதியெனவனுதினமிற்
கலந்தியவைசாச்வதமெனவேகல்லாமூடர்சமுசார
விலங்குக்கூடந்தனில்வசிப்பார்விவேகவான்களவையனைத்து
மிலங்குமாயாகாரியமென்றெண்ணிமனத்துநினையாரே. (ய).

விடயபரித்தியாகவிளம்பன முற்றிற்று.



## யாசிஞுதைனிய தூடணம்.



அழுதபசியெழுஞ்சிசுதன்னைத்தணியைப்பற்றிமுத்தலறக்கண்ணி
ரொழுகியுடறனர்மனையாள்கவலைகண்டுள்ளுடைந்துமிடறுள்ளேவிக்கும்
வழுவிலதிதிரனைத்தமனைப்பாசக்கிலிரவச்சத்தாற்றன்
புழுகேணிசாண்குழிதூர்த்தற்பொருட்டொருவர்பாலிரக்கப்போமிலானே. ().

---

யாசிஞுதைனியதூடணம்—இரத்தற்றொழிலைத்தூடணித்தல்.

ஞானமெனுமுடிச்சவிழ்ப்பதாய்த்தீரமுதலாந்தாமரைக்கூட்டங்கட்
காணகிலவாய்ப்பெருநாணெனுங்கொடியையறுக்குமரிவாளாயன்ன
பானமுதலிட்டடைத்துந் தூராதுட்குழிந்தபெரும்பாண்டம்பொல்லாத்
நிவிர்த்தியாற்பிறர்பாலேற்றுண்ணினுநிரம்பாதுசிறிதுந்தானே. (௨)

பந்துகளைவேண்டியவர்பாலிருந்துவாழ்வதினு
மந்தணர்தம்யாகசாலையிற்புசித்தும்வனங்களிற்போய்க்
கந்தமூலங்கடின்றுங்காபாலிநாமெனவே
எந்தமனைதோறுமையமேற்றுமுயிர்வாழ்தனன்றே. (௩)

எத்தனையோபழித்தயலோரிடும்பிச்சையேற்றுழல்வீர்
முத்தனையபனித்திவலைமொய்த்தகங்காதீரமொடு
வித்தியாதரர்வாசமேவுசிலாதலங்களும்வா
னத்தலத்தோங்கிமயவரையதும்போயெங்கொழிந்ததே. (௪)

இலைகனிகாய்கிழங்குகடேய்ந்திட்டனவோமரவுரிகளெலாம்பாழாச்சோ
மலையருவிசுவறியதோகுறைவாழ்வாலுறுக்கெருவமாந்நீக்காற்று
லலைபுருவச்சிலைதுடிக்குங்கொலைவேந்தர்பக்கலிற்சென்றவரைப்பார்த்துத்
தலைகவிழ்ந்தேனோதீனர்மதிமயங்கிநின்றுபாதவிக்கின்றாரே. (௫)

காயரியகிழங்கருந்துகற்றரையாம்புதிதுபுதி
தாயபாயலிற்படுநாமகலுவோந்தவவனத்திற்
றீயகுணமுடையபணச்செருக்கினரையார்க்குமொன்று
மீயவிலையென்றுபிறரேசுதலைக்கேளாமே. (௬)

எண்ணியகனிகள்வனத்திலுண்டங்கேயிளந்தளிர்ப்படுக்கையுமுண்டு
புண்ணியநதிகடோறுந்தண்ணீருண்டெப்பொழுதுமச்சுகமடையாமன்
மண்ணியற்செல்வர்வாயிலிலிவரேவாயில்காப்பாளர்போற்காத்துப்
பண்ணியகன்மத்தாலறிவீனர்பற்பகல்கழித்தலைவாரே. (௭)

பொருளுடையோரிடத்தெளிமைபுகன்மூடர்விடயவிச்சைபொருந்துமோக
ரிருவர்களும்வீணாகத்தொலைத்திடுநாண்முழுதுமனத்தெண்ணியெண்ணி
யருள்பெருகுமலைக்குகைக்கற்சேக்கையினிலான்மதிபானத்தினோடு
மருவுபிரமானந்தமாய்த்தனியேயினிதிருந்துமகிழுவேனே. (௮)

பெற்றதிலேமகிழ்ச்சியுறும்பெரியோர்க்கெப்பொழுதுமிச்சைபிறவாவேதன்
பற்றறப்பொற்கிரிதனைச்சம்பத்தினுக்கோரிருப்பிடமாய்ப்படைத்திட்டாலு
மற்றவர்க்குப்பணத்தாசையொருபோதுமனத்தைவிட்டுமாறிடாது
சற்றுமெனக்கிட்டமிலையக்கிரியைப்பேர்த்தவன்றந்தாலுந்தானே. (௯)

ஒருபிரயத்தினமுமின்றித்தினமுமெங்குந்தடையறக்கிட்டுவதாய்மானங்
கெருவமாச்சரியமிடர்கெடுவதாய்ச்சிற்சுகமாய்க்கிருபையோடு

நிருமலத்தும்பெரியோர்க்குஞ்சம்மதமாயட்சயனன்னிதியமாகி
யருமைபெருமையுளபிக்ஷாசாரமதையோகிகள்கொண்டாடுவாரே. (௰)

யாசிறுதைரியதாடன முற்றிற்று.

---

# போகாதைரியவருணனை.

---

பெலமியல்பேசம்வடிவக்குலந்தனஞ்சரீரம்வித்தைபெருமைக்கோர்மாற்
றலர்கலர்நோய்முதுமைவழுவரசர்மென்னெறியேழைமையாலச்ச
முலகமதின்மானிடருக்கெல்லாவற்றிலுமச்சமுடையதாகு
நலவைராக்கியமொன்றேயொன்றிலுக்குமஞ்சாதென்னாளுந்தானே. (௧)

பிறப்பிறப்பாற்றவனாகிவிலங்காவிர்த்தியகசுகங்கள்பெண்போகத்தா
லிறப்புறமெவ்வனமுப்பான்மகிழ்ச்சிபொருளாசையாலிறைதுட்டாளாற்
சிறப்புடைமைச்சுவரியங்கணிலையில்லாததினானற்சிலமாதி
யறப்பொருமையிறோரற்கெதற்றோடத்தெதுகெடாததுகண்டீரே. (௨)

ஆதிவியாதிகளான்மன்னவர்பல்மெலாக்குறையு
மூதியராஞ்செல்வமுதிருடனேயாபத்துமுறத்
தீதின்மிருத்துவுஞ்செனிக்கச்செனிக்கவேசிதைத்திடுவா
னிதியுடனெவையுமயனிருமியாநிலைபெறவே. (௩)

போகமிலக்குச்சமானமின்மைப்பொழுதில்லையாவில்லாது
மோகமடைவார்தருஞ்சுகமோமூடர்விரும்புஞ்சுகமதனை
வேகமயமாயெவையுமனத்தென்னிமகாபண்டிதர்களதி
வேகமுடனேபரப்பிரமவிசாரஞ்செய்யவேண்டுவரே. (௪)

வஞ்சியர்கள்போகமின்போல்வாழ்நாட்காற்றலலையுங்
கஞ்சதளத்திடைத்திவலைசுழிற்றிடுமெவ்வனசுகமோ
சஞ்சலமிக்குடையதெனத்தம்முனேயாராய்ந்து
விஞ்சமதியீர்பிரமவிசாரணையேசெய்குவீரே. (௫)

அலைபோற்சஞ்சலமாயுள்யௌவனஞ்சின்னாட்குசிதமபாயத்தோடு
நிலையாமையுடையனவேண்மதசேனிசுகங்கண்மின்னனிகர்பல்போகந்
தொலையாதபவக்கடலைக்கடப்பதற்குயுத்தியொடுசுருதிதானு
மலையானமதியுடையீர்பிரமவிசாரணையேமற்றதுசெய்வீரே. (௬)

ஆதிமலமூத்திராதிகர்ப்பவாசத்திலுடலிலதறக்க
கீதியுடன்யௌவனத்தின்மாதரொடுகூடியப்பாவிங்கிறக்கம்
வீதியின்மங்கையர்கிழவன்போவதைப்பாரெனச்சிரித்தன்மிகவுந்துக்க
மேதிறுற்சுகலேசமெய்திடுமோமானிடரேவியம்புவீரே. (௭)

---

அட்சயம்=குறையாநிதி. போகாதைரியவருணனை=விடயபோகசிக்குதலை வற்புறுத்திக்கூறல். ஆதி—மனக்கவலை.

கொடியபெரும்புலிபோலேமூதுமைபின்னேபயமுறத்திக்கொண்டுநிற்
றுடிகொள்பகையாளியெனப்பலரோகங்களுமுடம்பைத்துன்பஞ்செய்ய(கத்
வடியினுடைந்திடும்பாண்டத்ததினிரப்புந்தண்ணீர்போலாயுள்போயிப்
படியாயுமினமொருவர்க்கிடர்செயற்குமனிதர்சற்றும்பயப்படாரே. (அ)

சஞ்சலமாம்போகத்தாலுண்டானசமுசாரந்தன்னாலேயா
துஞ்சலைப்போற்சுழன்றாடியோடியலைமாந்தர்களேயொன்றுகேளு
மஞ்சலிர்நீரென்வார்த்தைநம்புநெஞ்சஞ்சமப்ரசன்னமாகியெம்மான்
கஞ்சமலரிணையடியைச்சிந்தியுஞ்சிந்தித்திடினற்கதிசேர்வீரே. (கூ)

எந்தவிடத்தறிஞரிந்திராதிபோகந்தரும்பாயெண்ணுவாரோ
வெந்தருசியாற்பிரவஞ்சத்தைரசவீனமெனவெண்ணுவாரோ
வெந்தவானந்தமழியாததாயுரைக்கடங்காதிருப்பதோநீ
யந்தவானந்தமதைச்சிந்தியற்பபோகமெல்லாமகற்றுவாயே. (ய)

போகாதைரியவருணனைமுற்றிற்று.



## † காலமகிமானுவருணனை.



அந்தகரோகர்வேந்தவனேமந்திரவரேயவனுஸ்தானம்
விந்தையதொண்டோடியார்சந்திரமுகிகள்பந்துமித்ரர்மிகவுத்தண்டர்
வந்தியருமவர்வாக்குஞ்சமத்தெனச்சொல்சமஸ்தமும்போமாறுசெய்வ
தெந்தக்காலத்தின்வசத்தந்தக்காலத்தினையாமிறைஞ்சுவோமே. (க)

பரவுபலர்குடியிருக்கும்வீட்டொருவன்குடியிருப்பான்பலருங்காண
விரவுபலரொருவனிடஞ்சந்திப்பாரவ்வீடுவெறுவீடாமேன்
றிரவுபகலெனுமிரண்டுபாசியினைத்தினமுருட்டியியமாதன்
றரணியெனும்பலகையின்மானிடரெனுஞ்சாரியையுடன்வைத்தாடுவானே.

சூரியோதயவஸ்தமனமோர்நாளாய்த்தொலைந்திடுமனிடும்வாழ்நாட்
காரியமனேகத்தாற்செலுங்காலங்கணக்கிலபிறப்பிறப்புடனே
பேரிடர்மூப்புப்பிணிபலவுறுதல்பிரசித்தமிவையெலாந்தெரிந்தும்
பாரிதுமோகமாகுமத்தியபானத்தினுன்மயங்கிடுந்தானே. (௩)

வந்தராப்பகலேவருவதுங்கழிந்தவைகலேவருவதுமறிந்து
முந்தியேசெய்தமுயற்சியேசெய்துமுடர்கள்சஞ்சலமின்றி
கந்தமக்கெதிராரெனத்திரிந்தலைவார்நாசமாம்பவமுறம்படிசெய்
யந்தவஞ்ஞானத்தவர்சற்றுநாணமதைமனத்திலுங்குறியாரே. (௪)

சிவபெருமான்றிருவடியைச்சிந்தியேந்திருத்தொண்டர்சேவைசெய்யேந்
தவமொடுகோபுரவாசற்கதவுமுதலானசிவதருமஞ்செய்யே

---

†காலமகிமானுவருணனை—காலத்தின்மகிமையைக்கூறல்.

மெளனமடவார்சுவர்க்கன்னவிலுநாங்கண்டறியேமின்றுமின்று
மவமோடுநாயெவ்வனக்காடழிப்பதற்கோர்கோடாலியாகினேமே. (௫)

மீளியோனெனச்சகலவித்தையுங்கற்றெதிரிகளைவென்றேமில்லை
வாளினுலியானைமண்டைபிளந்திசைகொண்டேமிலைநின்வளமென்றே
சேளியினைவிரும்பிமதவேளெனச்சேர்ந்தேயனுபோகித்தேமில்லை (ளார்
யாளிலாமாளிகைத்திபம்மெனவெளவனம்விருதாவாயிற்றம்மா. (௬)

நாகமுடனனேகவித்தைபுகமொடுகற்கவிலைதருமநீதி
யாகிநிதேடவிலையன்னைபிதாப்பணிவிடைசெய்யவுமோவில்லை
மோகமடமாதருடன்கூடியொருசொற்பனத்தழுயக்கவில்லைக்
காகமெனப்பரன்னவுணவாற்காலஞ்சிக்கிரத்திற்கழிவதம்மா. (௭)

மட்டறச்சென்னநிக்கரையில்வளர்மரக்கட்டொப்பாகமாயுமூப்பைக்
கட்டகட்டங்கெட்டபிணிமுதவிடரையுறமூடர்காணார்கொல்லோ
விட்டமுடன்றுய்நகப்பணினத்துடன்வாழ்ந்திருப்பவரையிரக்கமின்றிப்
பொட்டெனவேகாலன்வந்துகட்டியுடன்கொடுபோகும்போக்கைத்தானே.

ஆயுணூறண்டநினித்திரைபாதிவாலிபமூப்பதிலோர்பாதி
மாயுநோய்துயர்பிரயாசச்சேவையதனுலேமற்றைப்பாதி
யோயுமறிகடற்றிரைபோலிப்படிவாழ்நாண்முழுதமொழியுமானுற்
றேயுமிந்தப்பிராணிகளுக்கெப்படியுண்டாகிடுமோசேமந்தானே. (௯)

பாலனுச்சிலகாலம்யௌவனனுச்சிலகாலம்பலவாறுன
சாலநீணிதியோனுய்ச்சிலகாலஞ்சிலகாலந்தாழ்ந்தோனுகி
யேலமூப்பாலசியமுடனுடன்போனடித்திறதியினிலேமக்கள்
காலனுலயத்தமுன்னேகட்டுநிரைக்குள்வெகுவேகமாய்ச்செல்வாரே. (௰)

காலமகிமானுவருணனைமுற்றிற்று.

# ¶ எதிநிருபதிசம்வாதம்.

நிராசாட்சியிலுங்களுபாசனுகுருவருளாளிபுணராவே
நீர்பொருளாலுங்கல்விப்பொருளாற்சற்கீர்த்திநிலைநிறுத்தவல்லே
நீர்நாமென்பநிற்றனஞானத்தாரதம்பியமுண்ணினைவினேடு
நிரேமைப்பாராதவிடத்தெங்களுக்குமிடத்தினிலேநிராசைதானே. (௧)

பொருளுடையீர்நீர்நாங்கள்வேதார்த்தப்பொருளுடையேம்பொருவெம்போ
மருவலனைவெலுஞ்சூரர்நீர்நாங்கள்கவிகள்கெர்வமடக்கவல்லேம் (நின்
வேருவியுமைப்பொருளுடையோர்வணங்குவர்சிடர்கள்வணங்குமேலோர்நா
னருபர்நிரேமைவணங்காவிடிலுங்களுமைவிட்டுநீங்குவோமே. (௨) (ங்க

¶எதிநிருபதிசம்வாதம்—எதிகளுக்கும்அரசர்களுக்கும்விவாதம்.

எந்தநல்லவுடையுமுமக்கெமக்குமரவுரியெனினு
நந்தமக்குமகிழ்ச்சிசமானம்மதிற்றாழ்வுயர்வில்லை
முந்தவாவுளனெவனோமுடிவிறரித்திரனவனே
சந்தோடமுடையோர்க்குத்தரித்திரஞ்செல்வமுஞ்சமமே. (௩)

அடுத்தபசிக்கருங்கனிகளருந்தநதிப்பெரும்புனல்க
ளடுத்தநல்லமரவுரிகளுறங்கநெடுந்தரைபோது
நடுத்தவறுந்தனமதுபானக்களிப்பினுலறங்கை
விடுத்தமன்னரபிமானமேலணுவும்வேண்டேமே. (௪)

தங்குமிடமெங்கணும்பிச்சாடனம்வாங்கிப்புசிப்போ
மங்கமதிற்றிசம்பரத்தையழகுபெறமேற்புனைவோம்
பங்கமிலாச்சிங்கமெனப்பாரின்மிசைபள்ளிகொள்வோ
மெங்களுக்குராசரிடத்தென்னவருங்காரியமே. (௫)

காடகர்களல்லநகைக்கும்விடரல்லவிசைப்
பாடகர்களல்லமகாபண்டிதர்களல்லசெம்பொற்
சூடகக்கையாரலச்சாதுக்களெங்கட்குங்களிட்ட
மேடகத்தார்வேந்தர்களேயெவ்வாறுகிட்டிடுமே. (௬)

சிலவேந்தரெந்நாடுந்தந்நாடாய்வென்றுசம்பாத்தியஞ்செய்வித்தார்
சிலவேந்தரந்நாட்டையொருகுடைக்கீழரசாட்சிசெய்துவந்தார்
சிலவேந்தரந்நாட்டைத்திரணமெனயாவருக்குந்தியாகமிட்டார்
சிலவேந்தராருலகைக்குட்சிலவூராள்பவர்க்கேன்வீண்செருக்குத்தானே. (௭)

அரைநிமிடமொவ்வொருத்தராயனந்தமிராசாக்களரசாளிந்தத்
தரைகிடைத்தபோதினுமோருயர்விலைப்பூகண்டலேசங்கடன்னிற்
கரையிலாத்துண்டுகளிலொருமூலைக்கெசமானன்களாயுள்ளோர்காந்
துரையெனவெக்களிப்படைவாரவர்க்குமந்தபுத்திசித்தசுபாவமாமே. (௮)

நண்ணலர்போற்றுவோவரொடுசிறுமண்ணுண்டைக்காப்பொருதாடுபாகித்
துண்ணுமந்தக்கெட்டமதியுடையோரொன்றிரப்போருக்குதவுவாரோ
வெண்ணிலவாறிவீனரவர்பாலற்பப்பொருளுக்கிச்சைகூறு
மண்ணாவருபவரைப்பார்க்கினுமறிவீனர்களெனவேமதிக்கலாமே. (௯)

எவனுடையவெண்டலையெம்பெருமான்செஞ்சடைமுடிமேலேறலாச்சோ
வவனுடையசென்மமேநல்லசென்மம்பிராணரட்சைக்காகச்சீவச்
சவமெனப்போய்ச்சிலர்வணங்கத்தகாதாரமென்னுமதத்தாலுண்டான
மவகாரீங்காசிலபேர்க்கதிலவருக்கென்னபயனல்குந்தானே. (௰)

எதிநிருபதிசம்வாதமுற்றிற்று.

---

## ‡ மனசம்போதனநியமனம்.

எந்நாளும்பலவிதத்தன்னியர்கண்மனம்போனடக்கவாற்
றந்தபொருளைப்பெறும்பொருட்டுத்தானேனிந்தப்பிரயாஸை
சிந்தைதெளிவுற்றிடிற்றானேசிந்தாமணியின்றிரளொளிபோல்
வந்துபொருந்துநினைத்ததெல்லாமனமேமயங்காதிருப்பாயே. (௧)

நெஞ்சேவீணிலலையாதேநித்தம்பிரயத்தினமன்றித்
தஞ்சமெனவேகாலத்திற்குசாரும்பொறுமையுடனிருநீ
மிஞ்சிவிடுங்காரியமுமெண்ணேன்மேலேவருங்காரியமுமெண்ணே
லஞ்சேல்விதியாலடைவதேதோவதையேயானுமடைவேனே. (௨)

எக்கவலைக்குமிடமாமிந்திரியவனஞ்செல்மார்க்கம்விடு
மிக்கமாயையுடன்கூடிவிளையாடுதலைவிடுசமஸ்த
துக்கநிவிர்த்திசெயுஞானசுகமார்க்கத்திற்சென்மனமே
தக்கசொரூபசமாதியைச்சந்ததமுந்தடையற்றடைவதற்கே. (௩)

முன்னமோகந்தன்னைவிடுமுக்கட்பரனைவிசுவாசி
யன்னம்பயில்கங்கைக்கரைவாசஞ்செயலைநீர்க்குமிழிசெந்தீ
மின்னற்பாம்பினிடத்துமுறவினரோடழிசெல்வத்திடத்து
மென்னவிசுவாசம்மனமேவிவைநியாராய்ந்தறியாயே. (௪)

அரசர்புருவச்சாடையாற்குடிசிற்குடிவிருந்தியபாரஞ்செய்யும்
பரபோகஸ்திரியாயுட்லையாமையாயுமுனபலசம்பத்திற்
றிரணமட்டுமாசைவையேல்சிந்தையேகாசிநகர்த்தெருவினூடே
காமதிலேற்றிடுபிச்சாகாரமதேயபேட்சிக்கக்கடவேனே. (௫)

முன்னிசைப்பாட்டோசையற்றெக்கணதேசக்கவிகண்முழக்குமோசை
யின்னிசைக்குஞ்சாமரக்கைப்பெண்கள்வளையோசைமிகும்பேறுண்டானுற்
பொன்னிசையுஞ்சமுசாரத்திருந்திடில்லாவிடிற்பிறவிப்புணரிநீந்தற்
கென்னசையாமனமேநிர்விகற்பசமாதியிலேயிருந்திடாயே. (௬)

உத்தமமில்சரிகட்குச்சரீரமிருந்தாலதனாலுடையதென்னே
சத்துருக்கடலையினெஞ்சேதன்னுடையகழிவினைவைத்ததனாலென்னே
வத்தமுடைத்தாய்ப்பிரியமுடையோரைப்பாராததனாலென்னே
யெத்தனையோவுண்டெண்ணுஞ்சந்ததியிருந்தாலதனாலென்னேயென்னே.

வேதேயஞ்சராமரணபயம்பந்தசனங்களிடத்திலினியாசை
கவனமிருமன்மதவிகாரமின்மைதுற்சனசங்கமில்லாத
தவவனத்திற்றனித்திருத்தலிவைமுதலாம்வைராக்யந்தன்னைப்பெற்ற
வெவர்களுக்குமுலகுதனிலிதைப்பார்க்கப்பெறும்பேறொன்றில்லைத்தானே.

---

‡ மனசம்போதனநியமனம்—மனத்தைநல்வழியிற்செலுத்தல்.

மேதினியிற்பிறப்பிறப்புவிளங்குழூப்பழிவில்லாச்
சோதிசொரூபத்தையெப்போதுந்தியானஞ்செய்நெஞ்சே
பேதியாநிலைமையுறும்பிரமநிட்டனுனக்குலோ
காதிபத்யம்பிறபதவியற்பமாய்த்தோன்றிடுமே. (௯)

பேதவித்தென்டிக்கில்வியாபிக்கிறாய்பேய்மனமே
பாதலத்துமீதலத்தும்பட்சிபோற்றாவுகிறாய்
காதலித்துட்சோதியையோர்காலுமென்னுயெண்ணினையேற்
பூதலத்திற்சிற்சுகமெப்போதுமடைந்திருப்பாயே. (௰)

மனசம்போதனநியமனமுற்றிற்று.



## †நித்தியாநித்தியவஸ்துவிசாரணை.

பேதமறவைக்கியமானபேர்க்குப்பிறவிப்பிணிக்குமருந்
தாதலழிவின்மகாசுகமொன்றதுவேயல்லாதுன்குமறை
வேதமுதலானவையாலும்விரும்புசுவர்க்காதியின்பலத்தை
யீதலுறுகன்மத்தாலுமேதும்பலங்கிட்டுவதிலையே. (௧)

ஊழிக்கனலால்வடமேருவுங்கேடெய்துஞ்சுவறிவிடு
மாழிப்புனலுமட்டகிரியாற்றுங்குலகுமழிந்துவிடுஞ்
சூழியானைக்குட்டியின்காதுகள்போற்சலிக்குமுடற்பொருட்டுப்
பாழினுனென்றபிமானப்படுத்தித்திரிதலியாதினுக்கே. (௨)

உடற்கூனாகிப்பற்போய்க்கண்ணொளிபோய்ச்செவிடாய்ச்சிறந்தமுகத்
திடத்தேசானைவாயொழுகியெவர்க்கும்பழிப்புக்கிடமாகி
யடக்கமுறுசேய்பெண்டிர்பகையாகும்விருத்தசரீரிகட்கு
நடக்குங்காலுந்தன்னாடிநாளுவிதகஷ்டமுமாமே. (௩)

அத்திதோலுறிடுஞ்சண்டாளரிடிகிணற்றினைக்சன்
டுத்தமர்களொதுங்குவபோல்யுவதிகளெல்லாங்கிழவன்
சுத்தநரைத்தலையினைப்பார்த்துத்தூரவொதுங்கிநின்று
மெத்தவருவருத்தவனைவிட்டகன்றபோவாரே. (௪)

வெந்தெரிமனைக்குக்கூபம்வெட்டயத்தனிப்பாருண்டோ
வந்திடுசரைநோய்மெய்யைவருத்திடுவதற்குமுன்ன
மிந்திரியங்கெட்டாவியேகுமுன்விவேகவான்கட்
கந்தமின்முத்திக்கானகான்வினைவேண்டுந்தானே. (௫)

மின்னனையபொய்யுடல்வாழ்வினையுடையதுலகதனுன்
மன்னுதவம்புரிவோமாமனைவாழ்வைவிரும்புவமா
பன்னுகல்வித்தெள்ளமுதம்பருகுவமாவுறுதிபெற
வென்னசெய்வோமெனயதார்த்தத்தினையோசித்திலமே. (௬)

---

† நித்தியாநித்தியவஸ்துவிசாரணை-நித்தியமிது அநித்தியமிதெனவிசாரித்தல்.

குதிரையினசைவுபோலசைமனத்தோர்சொற்றவராதலாலொருவர்க்
கெதிருறாச்சிரசத்தையர்த்தவிராசெங்களுக்குப்பணத்தாசை
யதிலுப்புடம்பைக்கெடுத்திடுமியமருவியையோம்படிசெய்வான்
விதிவழிதவஞ்செய்வதிலுமேதினியில்வேறதிப்பிரியமற்றிலையே. (எ)

ஈனமார்பொருண்மானம்முறவினர்களெவ்வவர்தொலைந்துபோம்படிக்கு
மோனமாநெறிகளாவறம்படிக்குமுத்தியங்கரைபுறஞ்சூழும்
வானதியலையாற்புனிதமாங்கல்லார்வரைப்புறப்பூம்புதைவசித்த
முனிவோரும்புகழ்ந்துகொண்டாடத்தகுந்தவர்க்கேயதாகுமே. (அ)

சந்திரிகைபுட்பவனஞ்சாதுக்கள்சவாச
மெந்நூல்களுங்கேட்டலிலங்கிழையாருடனிரு
ளெந்தமுகன்யின்முகத்தைநோக்கிடனல்லதுபிரமா
னந்தநிட்டையோர்களுக்கிவைகளைத்தூநிக்காமே. (கூ)

தண்ணிலாமணிமேடைதையலர்களொடுசகவாசஞ்சங்கீத
மெண்ணினிக்காதலின்பமுதலாதனசுழலுமவிட்டிவிறநின்காற்றின் [கொண்டு
கண்ணனைசயுமிளக்கொளிபோற்சமன்றமுஞ்சஞ்சலமெனவேகருத்துட்
புண்ணியமாதவம்புரியும்வனங்களுக்குப்பெரியோரேன்போகின்றாரே. (ய)

## நித்தியாநித்தியவஸ்துவிசாரணை முற்றிற்று.

## ‡சிவார்ச்சனம்.

அத்தியந்தஞ்சமுசாரசாகரத்திற்சன்மவசத்தாலேயெங்கு
மித்தமுழுமெலிமதகண்ணாதிவிரிற்காணக்கேட்கிலாநித்யனுவோ
னொத்தனுவாதியவிடயமாம்பெண்யானையினிடத்திவிச்சைகூருஞ்
சித்தமெனுமியானையைக்கட்டிடுந்தம்பான்மரமெனவேசெப்பலாமே. (க)

கண்டபடியேதிரிதன்மனக்கட்டமில்லாமற்றிடைத்த
துண்டல்சாதுசங்கமுறவொழிதல்விடயவிச்சைகளுட்
கொண்டடக்கல்சாத்திரத்தின்குறைவில்கேள்விகொளலனைத்தும்
பண்டுபுரிமாதவமோவப்பலமோவெவையோவறியேனே. (உ)

எண்ணமுட்சேணித்தவெனவனபருவக்கழிந்ததால்வினியசில
முன்னிரைந்தவினையம்வித்தைமுதலவெல்லாமொருபலனற்றொழிந்தவந்த
கன்னிலாக்காலனும்வந்துயிர்கொடுபோகாமல்விட்டோர்காலும்போகா (க்
யண்ணல்சிவபெருமானடித்துணையேயினித்துணையென்றறிகின்றேனே.

செகதீசனுனமகாதேவமகேசரனிடத்துஞ்
சகத்தந்தாரன்மாவாஞ்சனார்த்தனன்றனிடத்துமெனைக்
கசமதிவோர்பேதமில்லையானாலுமெப்பொழுதா
மகதேவரிடத்தேயென்வாஞ்சைமிகச்சென்றிடுமே. (ச)

‡சிவார்ச்சனம்—சிவபூசைமகிமை.

அரவமொடுக்கிரவினிலவதிற்கக்காநிரமதி
லரணியஞ்சூழ்புளினமதிலனந்தசென்மமொழித்திடும்யா
மரகரவோஞ்சிவசிவவென்றானந்தபரவசமா
யரசர்மற்றையெவரெமக்கொப்பானவரென்றிருப்போமே. (௫)

பொருண்முழுதுஞ்செலவழித்துப்போகாதியொழிகவென
மருவுமனத்துடனேதெய்வத்தினைமுன்வந்தனைசெய்
தருமைமிகும்புண்ணியாரண்ணியத்திலிருந்துசிவன்
றிருவடியைச்சாருதச்சந்திரிகைதனினினைப்போமே. (௬)

வாரதிக்கரைநின்றகோவணமதுதரித்துச்
சிரசிலஞ்சலியஸ்தனாய்த்திரிபுராந்தகவோ
மரகாரட்சரட்சவென்றனுசந்தானனுமா
யிரவுநன்பகல்கணமெனக்கழிப்பதென்றினியே. (௭)

சங்கராவிராசசேவையைவிடுத்துச்சற்குருவாக்கியபான
மங்குறேய்நெடியமலைக்குகைதனிலான்மகிலனுமனத்தினையடக்கிக்
கங்கையின்மூழ்கிமஞ்சனமாதிகளாலுனையன்புடன்பூசித்
தங்குளபலாதிகளைப்புசித்தென்றேவடியனேன்றனித்திருப்பதுவே. (௮)

ஐயாசிவனேயேகாங்கியாகிநிராசையுடையவனா
மெய்யாய்விருப்புவெறுப்பிலனாய்ச்சுந்தசாந்தம்பொறுமையொடு
கையேபிச்சைப்பாத்திரனாக்கந்தையொழித்துத்திகம்பரனாய்ப்
பொய்யாங்கன்மத்தடிவேரெப்பொழுதுடறுத்துப்போக்குவனே. (௯)

எந்தவிடத்தும்வசிப்பதுமாயிருகையிரப்போடுடையதுமாய்
வந்தபுசிப்பின்மகிழ்வதுமாய்வையர்தரும்பாய்மதிப்பதுமா
யந்தவகண்டசிற்சுகத்தையடையும்யோகிசிவனருளாற்
பந்தமகன்றசிவன்முத்திப்பதத்தைத்தடையற்றடைவானே. (௰)

சிவார்ச்சனமுற்றிற்று.



## † அவதூதசரியை.



கந்தையாயிரஞ்சனுடைக்கௌபீனவுடைகடுப்பகலிலேதானே
வந்தபிச்சையூண்காடுசுடுகாட்டுப்படுக்கைகணன்மார்க்கசித்தம்
பந்தமற்றுத்திரிதல்சிவயோகநிட்டைபபழக்கவனுபவமுண்டானா
லந்தயோகிக்குமற்றைத்திரிலோகாதிபத்தியமேனதுவேண்டாவே. (௧)

கெண்டைமீனுதியசீர்கிழித்துவிளையாடுதலாற்
றெண்டிரைவாருதிப்புனல்கள்சிதிசேறுாடுங்காவா
மண்டலமாத்திரமாம்ப்ரமாண்டமாமுலோபமதை
யுண்டுபெண்ணமாட்டாவாமொருக்காலுந்திருக்கே. (௨)

---

† அவதூதசரியை—முற்றத்துறந்தோர்சரித்திரம்.

பொன்னம்மேயுனைப்பணிவேன்மெய்ஞ்ஞானவாழ்வெனக்குப்பொருந்தச்
செய்வா, யின்னமொருவனைச்சேரென்னிச்சைதவிர்போகத்திலிச்சையோ
வுன்னையடுத்திடுவானொருபசியபுரசிலையாமுவந்தபாத்ரந் (னே
தன்னையொருகரத்தேந்திப்பிச்சாவிர்த்திக்கேயத்தினஞ்செய்வேனே. (௩)

பூவணைமண்டரைகையேதலையணையாகாயமேபுனைமேற்கட்டி
யேவலுறுந்தென்றலேவிசிறிநிலவேதீபமிவைகளோடு
மாவலொழிந்திடுவிரத்தியாந்தருணமாதுடன்சேர்ந்தனுபோகித்துக்
காவலன்போற்சாந்தமிகுஞ்சிவயோகியிராக்கண்ணுறங்கச்செய்வானே. (௪)

அடக்கம்பொறையைந்திந்திரியமடக்கறனிமைசுவாதீன
நடக்கைவிரத்திமார்க்கமுடனுற்சந்திகடோறுங்கிழிந்து
கிடக்குந்துணிகீழுடையோனுய்க்கிளைக்கும்பிறவிப்பெருங்கடலைக்
கடக்குமார்க்கங்கண்டுலகின்கண்ணோர்தவசிவிளங்குவனே. (௫)

பித்தனோஜாதிப்பிரட்டனோசூத்திரனோ
பத்தனோவேதியனோ[illegible]மாதவனோ
சித்தனோவென்னச்செகம்பழிக்க[illegible]யமற்றுச்
சுத்தமௌனிகடஞ்சோக்காய்த[illegible]னே. (௬)

திரணமனேகம்பசுக்களுக்குந்தென்றல்வி[illegible]ங்களுக்குமருள்
பிரமனிவர்க்குமப்படியேபிரயத்தினமற்[illegible]சத்தாற்
றரவுஞ்சமுசாரக்கடலைத்தாண்டுதீர்க்கம[illegible]டைய
நார்மற்றதைத்[illegible]தேடுவரெனசிக்கும்பல[illegible]குணங்களுமே. (௭)

கங்கைக்கரைசூழிமய[illegible]மானத்திவீருந்
தங்குப்பிரமானந்தியானு[illegible]சிலையிற்
றங்கிவிளங்குமென்னுடம்பிற்றவகடினவுதீர்ந்திடவே
செங்கட்கிழமானினங்களெல்லாந்திரளாய்க்கூடியுரைசிடுமே. (௮)

துன்னகரப்புப்பாத்திரங்கைதரைபூவமளியட்டதிக்குந்
துன்னுகலையிப்பெருவாழ்வின்சுகமேலெவற்குக்கிடைத்திடுமோ
வன்னோனியற்றுஞ்சரித்திரஞ்சுவானுபூதியாமவனே
கன்மவிதையைச்சுட்டதிமோகபாசங்களைவேரறுப்பானே. (௯)

தந்தைகாற்றனைபூமிசார்ந்தசினேகிதன்றபனன்
பந்துசலஞ்சகோதரன்பரமாகுமுங்களுக்கு
வந்தனமும்மாலடைந்தமகத்துவமெய்ஞ்ஞானத்தாற்
சிந்தைமயக்கறப்பிரமதியானமதையடைந்தேனே. (௰)

## வைராக்கியசதகமுற்றிற்று.

ஆண்பால்பெண்பாலலியாயல்லனுமாயுள்ளதுமாய்ப்
பூண்பானும்புசிப்பானும்புணர்வானும்புணர்ப்பானுங்
காண்பானுங்காட்சியுமாய்க்கர்மகர்த்தாவெல்லாமாய்
மாண்பாயபரப்பிரமமாநிலத்துவாழியவே.

## பர்த்துருகரி முற்றிற்று.

ஆ பாயிரமுள்பட—கவி—௩௱௰.

—o:o—